Phone: No. 2241

Regd. No. M. 5934

# ஜனசக்தி

தின இதழ். ஆசிரியர்.ப.ஜீவானந்தம்

மலர் 14] பக்கம் 4 :: விலை 1 அணா [இதழ் 213

சென்னை 21-3-58 ஹேவிளம்பி, பங்குனி 8 வெள்ளி (வெளியூர் 22-3-58 ஹேவிளம்பி, பங்குனி-9 சனி)

### சில தேயிலைத் தோட்டங்களை அஸ்ஸாம் சர்க்கார் மேற்கொள்ளலாம்

புதுடில்லி, மார்ச் 19—

மூடிவிடுவதாகக் கூறிய சில வெள்ளைக்கார தேயிலைத் தோட்டங்களை அஸ்ஸாம் சர்க்கார் நடத்த ஆலோசிப்பதாக, மொரார்ஜி தேசாய் இன்று லோக சபையில் கூறினார்.



# தஞ்சையில் போலீஸ் அடக்குமுறை

## சட்டரீதியான எதிர்க்கட்சியை ஒடுக்க சர்க்காரின் தாக்குதல்

## பொய் வழக்கு ஜோடிக்க பொறுப்பற்ற குற்றச்சாட்டு

### மணலி கந்தசாமி கண்டனம்

**தோழர் மணலி கந்தசாமி கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாகாணக் கமிட்டி அங்கத்தினர் கீழ்க்கண்ட அறிக்கையை விடுத்துள்ளார்.**

சென்னை, மார்ச் 21—

சென்ற 4 தினங்களாக தஞ்சை ஜில்லாவில் கம்யூனிஸ்ட் கட்சித் தலைமைக்காரியாலயமும், சீர்காழி, மாயவரம், திருத்துறைப்பூண்டி தாலூகா தலைமைக் காரியாலயங்களும், ஜில்லாக் கமிட்டி காரியதரிசி தோழர் காத்தமுத்துவின் வீடும் விடியுமுன் சோதனையிடப் பெற்று, கட்சிக் கணக்குகள் கமிட்டிக்கூட்ட நடவடிக்கைப் புத்தகங்கள், கடிதப் போக்குவரத்து பைல்கள், கணக்குகள் இவற்றை போலீஸ் கைப்பற்றியுள்ளது. இதுவரை ஜில்லாக் கமிட்டி அங்கத்தினர்கள் தோழர்கள் பாரதி மோகன், ஞானசம்பந்தம் இருவரும் கைது செய்யப்பட்டுள்ளனர். இந்த நடவடிக்கைகளைப்பற்றி பத்திரிகைகளில் தவருனதும் விஷமத்தனமானதுமான தலைப்புக்களுடன் செய்திகள் வெளி வந்துள்ளன. பலாத்காரத்தைத் தூண்ட ஜில்லாக் கட்சி சதி செய்ததாகவும் அதற்கான தஸ்தாவேசுகள் கைப்பற்றப்பட்டதாகவும் தினசரிப் பத்திரிகைகள் செய்தி வெளியிடுவது பொறுப்பற்றதாகும்.

மாயவரம் தாலூகாவில் குத்தகை நிலத்தில் அறுவடை தகராறில் 269 விவசாயிகள் கைதுசெய்யப்பட்டு, பல செக்ஷன்களின் கீழ் வழக்கு நடந்து இன்று தீர்ப்புக் கூறும் தறுவாயில் உள்ளது. ஜில்லாபூராவிலும் அறுவடை சுமுகமாக முடிந்துவிட்டது குறிப்பிட்ட சம்பவம்பற்றி வழக்கு முடியும் தறுவாயில் உள்ளது. இந்தச் சூழ்நிலையில் பலாத்காரத் தூண்டுதல், சதி, மிராசுதார்களுக்கு ஆபத்து என்று பறைசாற்றுவதெல்லாம், வளர்ந்துவரும் விவசாயிகள் இயக்கத்தினிடையில் பீதியைக்கிளப்பச்செய்யும் மிராசுதார் குரல் என்பது தெளிவாகத் தெரியும்.

வழக்கு முடியும் தறுவாயில் இருக்கும்போது போலீசாரது இத்தகைய நடவடிக்கை அனுவசியமானதும், ஜனநாயக ரீதியாக இயங்கும் ஒரு கட்சிக்கு அநீதி இழைக்கும் செயலாகும். நிச்சயமாக ருசுப்பிக்கக்கூடிய அடிப்படைகள் இருந்தாலல்லாது சட்டபூர்வமான கட்சிகளின் தஸ்தாவேசுகளைக் கைப்பற்றுவது மாற்றுக் கட்சிகளுக்கு இழைக்கும் அநீதியாகும். 151 செக்ஷன் பிரகாரம் பொதுஜன ஊழியர்களைக் கைது செய்வதும், மாற்றுக் கட்சிகள் காரியாலயத்தை சோதனை செய்து ஸ்தாபன சம்பந்தமான தஸ்தாவேசுகளைக் கைப்பற்றுவதும் ஜனநாயகத்தை அவமதிக்கும் இழி செயல்கள். காங்கிரஸ் சர்க்கார் இதைக் கருத்தில்கொண்டு நீதிவழங்கமுன் வரவேண்டும். சகல ஜனநாயக சக்திகளும் ஆட்சியாளர்களது இத்தகைய போக்கை ஒன்றுபட்டு கண்டிக்கக் கோருகிறேன்.

---

கோடம்பாக்கம் விசாரணை:

## "வேதாசலத்திற்கு லஞ்சம் கொடுக்க ஆளவந்தார் வாக்களித்தார்"

### ஆறுமுகம் திருமுகமாகிவிட்டதாக போலீஸ்காரர் தமாஷ் செய்தார்

### கோவிந்தன் சாட்சியம்

சென்னை, மார்ச் 20—

கோடம்பாக்கம் மர்ம மரணம் பற்றிய விசாரணை இன்று 5-வது மாகாண மாஜிஸ்ட்ரேட் திரு. டி. ஆர். நாராயணன் முன்னிலையில் மீண்டும் ஆரம்பமாயிற்று.

பெரிய ராஜிப்பிள்ளைத் தோட்டத்தைச் சேர்ந்த கண்ணம்மாள் என்னும் பெண் சாட்சியம் கூறியதாவது:

பூ விற்றுவந்த ருக்மணி அம்மாளுக்குநான் உதவி ஆளாக இருந்து வந்தேன். சுமார் 2 மாதங்களுக்கு முன்பு என்னை அந்த அம்மாள் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றாள். அப்போது அவளது வீட்டிற்குள் இரண்டு கான்ஸ்டேபிள்கள் இருந்ததைப் பார்த்தேன். அவர்களை நான் அடையாளம் காட்ட முடியும். ஒருவர் கட்டை குட்டையாக கருப்பாக இருந்தார், இன்னொருவர் நெட்டையாக இருந்தார். அவர்கள் போலீஸ் உடுப்பு அணிந்திருக்கவில்லை. அந்த கான்ஸ்டேபிள்களில் ஒருவர் என்னைப் போய் விடும்படி கூறினார். நான் போய் விட்டேன். ருக்மணியும் என்னுடன் வந்துவிட்டாள்.

இவ்விதம் கண்ணம்மாள் கூறினாள்.

#### கோவிந்தன் சாட்சியம்

கோடம்பாக்கம் குளமேடுஹை ரோடைச் சேர்ந்த கோவிந்தன் கூறியதாவது:

#### ஆறுமுகம் திருமுகம்

விசாரத் தடை சட்டத்தின் கீழ் ஒரு வழக்கில் சாட்சியம்கூற கோடம்பாக்கம் போலீஸ் ஸ்டேஷனுக்கு 18ம் தேதி காலை கூட்டிச் செல்லப்பட்டேன். அப்போது நான்கு கான்ஸ்டேபிள்கள் ஆறுமுகத்தைத் தூக்கிவந்து வராந்தாவில் விட்டார்கள். அவர்களுடன் மதுரையும் இருந்தான். ஒரு 'டிரங்க்' பெட்டி களவு போனது சம்பந்தமாக இருவரும் ஸ்டேஷனுக்கு கூட்டிவரப்பட்டதாகவும் தங்கள் இருவரையும் போலீஸார் அடித்ததாகவும் மதுரையே என்னிடம் கூறினான்.

பின்னர் கிரைம் கான்ஸ்டேபிள் ஆறுமுகம் திருமுகம் ஆக்கப்பட்டிருப்பதாக என்னிடம் வேடிக்கையாகக் கூறினார். ஆறுமுகம் இறந்திருந்தால் போலீஸார் பத்துமுகம் ஆகியிருப்பார்கள் என்று

(3-ம் பக்கம் பார்க்க)

---

# உற்பத்தி பெருக்கினால் நன்மை அடைந்தது யார்?

## ஏகபோக முதலாளிகள் வளர்ச்சிக்கு வழிசெய்கிறது சர்க்கார் கொள்கை

### லோகசபையில் வி. பி. நாயர் கண்டனம்

புதுடில்லி, மார்ச் 20—

இன்று லோக சபையில் தொழில், வர்த்தக மந்திரி இலாகா மான்ய விவாதத்தின்போது பேசுகையில், "சர்க்காரின் கொள்கை நாட்டில் ஒரு சில முதலாளிகள் ஏகபோக முதலாளிகளாக மாறுவதற்கே ஊக்கமூட்டுவதாக இருக்கிறது" என்று கம்யூனிஸ்ட் உறுப்பினர் வி. பி. நாயர் குற்றம் சாட்டினார்.

இன்று லோக சபையில், இவ்வருட பட்ஜெட்டில் வர்த்தக, தொழில் மந்திரி இலாகாவுக்கு நிதி ஒதுக்கும் மான்யத்தின் மீது நடைபெற்ற விவாதத்தின்போது, நிதி மந்திரி மொரார்ஜி தேசாய், இறக்குமதிக் கட்டுப்பாட்டுக் கொள்கையால் நல்ல பலன் ஏற்பட்டிருக்கிறதென்றும், அக்கொள்கை தொடர்ந்து பின்பற்றப்படும் என்றும் கூறினார்.

தோழர் வி.பி. நாயர், (கேரளா) விவாதத்தில் பேசுகையில், "ஆலைப் பொருள் உற்பத்தி பெருகி இருக்கிறது என்பது வாஸ்தவம் தான். ஆயினும், நாட்டின் தொழில் நிலைமையைப் பற்றிப் பரிசீலனை செய்து பார்க்கும் போது, உற்பத்திப் பெருக்கத்தினால் அதிகப்படியான நன்மை அடைந்தவர்கள் பொதுமக்களோ அன்றி, தொழிலாளர்களோ அல்ல; ஆனால் தொழில் முதலாளிகள்தான் என்பது தெட்டத் தெளிவாகத் தெரிகிறது. கடந்த வருடங்களிலெல்லாம் லாபங்கள் உயர்ந்து கொண்டே வந்துள்ளன என்பதையே நிதி மந்திரி இலாகாவின் புள்ளி விபரங்கள் நிரூபிக்கின்றன. ஆனால் அதேசமயத்தில் அவர்களிடமிருந்து சர்க்கார் கோரிய வரிகள் அதே விகிதத்தில் உயரவில்லை" என்றார்.

"பத்திரிகைக் காகித உற்பத்தி அதிகரித்துள்ளது, ஆயினும் பத்திரிகைக்காரர்களுக்கு குறிப்பாக சிறு பத்திரிகைகளை நடத்துபவர்களுக்குக் காகிதம் மலிவான விலைகளில் கிடைப்பதில்லை. சிறு பத்திரிகைக்காரர்களுக்குக் கொள்ளை விலைகளில் காகிதம் விற்கப்படுவதற்கு அனுமதிக்கப்படுகிறது.

(3-ம் பக்கம் பார்க்க)

---

## நிலக்கரிச் சுரங்க யந்திரங்கள்

### சோவியத் ரஷ்ய உதவியுடன் துர்க்காபூரில் தொழிற்சாலை

புதுடெல்லி, மார்ச். 20—

நிலக்கரிச் சுரங்க வேலைகளுக்கு அத்தியாவசியமான யந்திரங்களைச் செய்வதற்கான ஒரு தொழிற்சாலையை நிறுவ இந்திய சர்க்கார் முடிவு செய்திருக்கிறது. இந்தத் தொழிற்சாலை மேற்கு வங்க ராஜ்யத்திலுள்ள துர்க்காப்பூரில் ஸ்தாபிக்கப்படும்.

இந்தத் தொழிற்சாலையை நிர்மாணிக்க 13 கோடி ரூபாய் செலவாகும் இதற்கு சோவியத் யூனியனிலிருந்து நிதி உதவியும் தொழில் நுட்ப உதவியும் கிடைக்கும் என்று தெரிகிறது.

வருடத்தில் முப்பதாயிரம் டன் அளவுள்ள நிலக்கரிச் சுரங்க இயந்திரங்களை இத்தொழிற்சாலை உற்பத்திசெய்யும். இதன் விளைவாக நிலக்கரி உற்பத்தி வருடந்தோறும் 3 லட்சத்து 90 லட்சம் டன்னிலிருந்து 6 கோடி டன்னாக அதிகரிக்கும்.

செக்கோஸ்லோவேகியாவின் உதவிபெற்று நிறுவப்படப் போகும் பெரிய வார்ப்புத் தொழிற்சாலையை ராஞ்சியில் ஸ்தாபிப்பதென்று சர்க்கார் முடிவு செய்திருப்பதாகத் தெரிகிறது. இதற்கு அவசியமான அந்நியச் செலாவணி 20 கோடி ரூபாய்.

இந்தத் தொகை முழுவதையும் தவணைக் கடனாகக் கொடுக்க செக்கோஸ்லோவேகியா இசைந்துள்ளது.

---

## தோழர் காத்தமுத்து கைதுசெய்யப்பட்டார்

தஞ்சை, மார்ச் 20—

கம்யூனிஸ்டுக் கட்சி தமிழ்நாடு கமிட்டி உறுப்பினரும், தஞ்சை ஜில்லாக் கமிட்டி செயலாளருமான தோழர் எம். காத்தமுத்து இன்று போலீசாரால் கைது செய்யப்பட்டுள்ளார்.

கைது செய்யப்பட்டுள்ள தோழர் கே ஆர். ஞானசம்பந்தத்தை ஜாமீனில்விட மறுக்கப்பட்டுள்ளது.

---

## ராஜகுடும்பத்தார் நிலங்களில் விவசாயிகளுக்கு சாசுவத உரிமை

### சட்டம் நிறைவேற்றப்படும் என கேரள ரெவின்யூ அமைச்சர்

திருவனந்தபுரம், மார்ச் 20—

திருவிதாங்கூர் மகாராஜாவின் குடும்பத்திற்குச் சொந்தமான ஸ்ரீ பாதம் நிலங்களில் விவசாயிகளுக்குச் சாசுவத குடிவார உரிமையளிக்கும் மசோதா ஒன்றை சட்டசபையில் கொண்டுவர உத்தேசித்திருப்பதாக கேரள சர்க்கார் ரெவின்யூ அமைச்சர் கௌரி கூறினார்.

இவ்வாறு குடிவார உரிமை பெறும் விவசாயிகள் நில வரி கட்ட வேண்டும். சென்ற காலங்களில் ராஜ குடும்பத்தினர் இந்த வரியைப் பெற்று வந்தார்கள்.

இந்த நிலங்கள் சம்பந்தமாக கேரள சர்க்கார் திருவிதாங்கூர் மன்னருடனும் பெரிய மகாராணியுடனும்பேச்சுவார்த்தைகள்நடத்தியுள்ளதாகவும் அவர் குறிப்பிட்டார்.

ராஜ்ய நிர்வாகத்தில் லஞ்ச ஊழல்களை ஒழிப்பதற்காக ஒரு மசோதா கொண்டுவரப்படும். இது சம்பந்தமாக இதர ராஜ்யங்களில் உள்ள சட்டங்களை சர்க்கார் பரிசீலனை செய்து வருவதாயும் முதலமைச்சர் இ. எம். எஸ். நம்பூதிரிப்பாட் சட்ட சபையில் குறிப்பிட்டார்.

ஜனசக்தி

சென்னை 21-3-1958

# பஞ்சாலைகளில் நெருக்கடி

பம்பாய் ராஜ்யத்தில் 25 பஞ்சாலைகள் மூடப்பட்டு விட்டன. மேலும் 40, 50 பஞ்சாலைகள் மூடப்படலாம் என்று பம்பாய் மில் முதலாளிகள் சங்கத் தலைவர் பயமுறுத்தினார். மில்களை நடத்துவது பொருளாதார அடிப்படையில் நஷ்டமே என்றும், லாபகரமானதல்ல என்றும் அவர் காரணம் கூறினார். நஷ்டப்பட்டுக் கொண்டு எத்தனை நாள் நடத்துவது என்று அவர் கேட்டார்.

லாபகரமில்லை என்ற காரணத்தைக் கூறி முதலாளிகள் கதவடைப்புச் செய்து தொழில்களை மூடுவது நியாயமல்ல. சென்ற காலத்தில் அவர்கள் அடித்த கொள்ளை லாபம் கிடைக்காமல் இருக்கலாம். ஆனால் மிகப் பெரும்பாலான ஆலைகள் நிர்வாக ஊழல் காரணமாகவே மூடப்பட்டுள்ளன.

கணக்குக் காட்டாமல், தொழிலாளர் பிராவிடண்ட் நிதிப் பணத்தைச் சுருட்டிக் கொண்டு சில நிர்வாகிகள் ஓடிவிட்டிருக்கிறார்கள். ஷோலாப்பூர் ஆலை இம்மாதிரி ஊழல் காரணமாகவே மூடப்பட்டது. இதனால்தான் சர்க்கார் அதை எடுத்து நடத்தத் தொடங்கியது.

ஒரு சில ஆலைகள் மத்திய எக்சைஸ் வரியால் பாதிக்கப்பட்டன என்றனர். எனவே மத்திய சர்க்கார் எக்சைஸ் வரியைக் குறைத்து ஆலை முதலாளிகளுக்கு நிவாரணம் கொடுத்திருக்கிறது.

இது ஒருபுறம் இருக்கத் தங்களது லாபக் கொள்ளையில் மட்டுமே கருத்தாக இருந்து லாபம் கிடைத்த பொழுதும் நியாயமாக போனஸ் முதலியவற்றைக் கொடுக்க முதலாளிகள் மறுத்து வருகிறார்கள். தொழிலாளர் சார்பில் எத்தகைய தொழில் கோர்ட் முடிவுகளும் சட்ட பூர்வமாக அமுல் நடத்தப்படக் கூடாது என்பதே அவர்களது ஆசை. நாட்டில் மக்கள் வாங்கும் சக்தி குறைந்திருப்பதால் துணி தேங்கியிருப்பதை அவர்கள் காண்பதில்லை.

பொதுமக்களின் வருவாய் அதிகரித்து வாங்கும் சக்தி அதிகரித்தால்தான் மார்க்கெட் விரிவடையும்; தேக்கம் தீரும். தொழில அபிவிருத்தி அடைய உள்நாட்டில் விற்பனை மார்க்கெட் விரிவடைய வேண்டும். நாட்டிலுள்ள பெரும்பாலான கிராமவாசிகள் நிலை உயர வேண்டும். இதற்குத் தீவிரமான நிலச் சீர்திருத்தமே வழி.

இந்த நடவடிக்கை எடுப்பது தான் தொழில் வளர்ச்சிக்கு உத்தரவாதம் கொடுப்பதாக இருக்கும். இதற்கு சர்க்கார் நடவடிக்கைகள் எடுக்க வேண்டும்.

மாறாக முதலாளிகள் ஆலைகளை மூடிவிடுவதாக அச்சுறுத்தல்கள் நடத்தி சர்க்காரிடமிருந்து வரிச் சலுகைகள் பெற்று மறுபுறம் தொழிலாளர் நல்வுரிமைகளையும் மறுத்து அக்ரமமாக லாபம் திரட்ட முயன்றால் அது நடக்காது. இவ்வாறு செய்ய அவர்களுக்கு ஊக்கமளிக்கும் வகையில் எவ்வித நடவடிக்கையையும் சர்க்கார் எடுக்கக் கூடாது. அவர்களது சலசலப்புக்கு வணங்கக் கூடாது தங்களது கொள்ளை லாபத்தில் சிறிதும் குறையக்கூடாது என்பதே அவர்களது கூக்குரலின் உள் நோக்கம். இதில் சிறிது பாதிக்கப்பட்டாலும் மில்களை மூட முன்வருகின்றனர். பல்லாயிரக்கணக்கான தொழிலாளி வயிற்றில் அடிப்பதுடன், துணி உற்பத்தியைக் குறைத்து செயற்கையான முறையில் ஒரு பற்றாக்குறை நிலையை உண்டாக்கி விலையை உயர்த்தி கொள்ளை லாபமடைய சதி செய்கின்றனர். தேச நலனை முன்னிட்டு இதை முறியடிக்க வேண்டும்.

## 144 தடைச் சட்டம்

### திருத்த மசோதாவை சர்க்கார் எதிர்க்கும்

புதுடெல்லி, மார்ச். 20—

பிரிட்டிஷ் ஏகாதிபத்திய ஆட்சியினர் அமைதி ஒழுங்கு நிலை நாட்ட அவசியம் என்று கொண்டு வந்திருந்த 144 தடைச்சட்டம் தொடர்ந்து நீடிக்கும் என்று தெரிகிறது. இந்தச் சட்டத்தை அகற்றி விடவேண்டும் என்று பார்லிமெண்ட் உறுப்பினர் அவஸ்தி ஒரு திருத்தம் பிரேரேபித்துள்ளார். சர்க்கார் சார்பில் இத்திருத்தம் எதிர்க்கப்படும்.

# நீர்வழி போக்குவரத்துக்கு புதிய படகு கம்பெனி

## சர்க்கார் தனியார் கூட்டு நிறுவனம் ஏற்படும்

### கேரள ராஜ்ய சர்க்கார் முடிவு

திருவனந்தபுரம், மார்ச் 18—

கேரள சர்க்கார் மொத்தப் பங்குகளில் 51 சதவிகிதம் பங்கு முதல் போட்டு ஒரு கோடி ரூபாய் மூலதனத்துடன் ஒரு நீர் வழி போக்குவரத்து நிறுவனம் ஏற்படுத்த முடிவு செய்திருக்கிறது.

கொல்லம் முதல் எர்ணாகுளம் வரையுள்ள படகு போக்குவரத்தை இந்த நிறுவனம் ஏற்று நடத்தும் என்று தெரிகிறது.

இந்தத் தகவலை பொது மராமத்து அமைச்சர் டி. ஏ. மஜீத் சட்டசபையில் வெளியிட்டார்.

இப்போது கொல்லம் எர்ணாகுளம் படகு சர்வீஸ் நடத்தும் தனியார்கள் அனைவருக்கும் இந்த நிறுவனத்தில் பங்குண்டு. அவர்களது படகுகளை நிறுவனம்எடுத்துக்கொள்ளும். இவற்றின் விலையை நிறுவனத்திற்குரிய மூலதனத்திற்கு தனியார் பங்காகச் சேர்த்துக் கொள்ளப்படும்.

சர்க்கார் 51சதவிகிதமும் படகு சொந்தக்காரர்கள் 40 சதவிகிதமும்,தொழிலாளர் 9 சதவிகிதமும் நிறுவனத்தில் முதலீடு செய்வார்கள். ஏழு பேர்கொண்ட ஒரு நிர்வாக போர்டு இந்த நிறுவனத்தை நடத்தும். இதில் தொழிலாளிகளின் பிரதிநிதிகளாக இரண்டு பேர் இருப்பார்கள் என்று தெரிகிறது.

ஏப்ரல் மாதம் 1-ந் தேதி இந்த நிறுவனம் வேலை தொடங்கும்.

# செகண்டரி கிரேடு ஆசிரியர்களுக்கு சம்பள வெட்டு!

### ஆரம்ப ஆசிரியர் கண்டனம்

மன்னார்குடி, மார்ச் 17—

மன்னார்குடி ஆரம்ப ஆசிரியர் யூனியன் திரு என். எஸ். வெங்கடேஸ்வரன் தலைமையில் 15-3-58 அன்று நடைபெற்றது. அவர் பேசும்போது,

'முதல் 5 வரையிலுள்ள வகுப்புகளில் போதிக்கும் செகண்டரி கிரேடு ஆசிரியர்களின் சம்பள விகிதம் ரூ 40-1-48 தான் என்று சென்னை சர்க்கார் பிறப்பித்துள்ள உத்திரவை வன்மையாகக் கண்டித்தார். 45-2-85 என்ற புதிய சம்பள விகிதம் எல்லா செகண்டரி கிரேடு ஆசிரியர்களுக்கும் ஒரு வருடத்திற்கு மேல் கொடுக்கப்பட்டு, 1957 நவம்பர் முதல் ஒரு சம்பள உயர்வும் கொடுக்கப்பட்டுள்ள நிலைமையில் இவ்வாறு திடீரென்று அதைக் குறைப்பது மிகவும் அநீதி என்றார்.

பிரதம மந்திரியும் பல பொறுப்புள்ள மத்திய சர்க்கார் கல்வி இலாகா அதிகாரிகளும், ஆரம்ப ஆசிரியர்களின் குறைந்தபட்ச அடிப்படைச் சம்பளம் ரூ. 50 ஆக இருக்க வேண்டுமென்று கூறிவரும்போது, சென்னை சர்க்காரின் இந்தச் செய்கை வெட்ககரமானது என்றார்.

## நகர சபையின் புதிய வரி விதிப்புக்கு

### நெல்லையில் கண்டனம்

திருநெல்வேலி, மார்ச் 15—

நெல்லை நகர சபையார் வேனல் பந்தலுக்கு இவ்வாண்டிலிருந்து வரி விதித்திருக்கிறார்கள்.

வேனல் பந்தலுக்குப் போட்டிருக்கும் வரியை ரத்து செய்யக் கோரி கம்யூனிஸ்ட் கட்சி நெல்லை நகர் கிளை, மக்கள் மத்தியிலும், வியாபாரிகளிடமும் ஒரு மகஜரில் கையெழுத்துகள் சேகரித்து வருகிறது.




"இங்கிருக்கக்கூடிய வடநாட்டார்களை அங்கே அனுப்பிவிட்ட பிறகு தமிழர்கள் இங்கே வந்தால் அவர்களை வைத்துக் கொள்வோம்."

—சட்டசபையில் ஆசைத்தம்பி. 'நம்நாடு' (14-3-58)

சுமார் 50 லட்சம் தமிழர்கள் தமிழ் நாட்டிற்கு வெளியே வசிக்கிறார்கள். சிறுபிள்ளைத்தனத்துடன் பேசி வெளியே வசிக்கும் தமிழர்கள் வயிற்றில் மண்ணடிக்காதீர் என எச்சரிக்கிறார் ஒரு தமிழ் தேசபக்தர்.

* *

"ராஜாஜிக்கு தூரதிருஷ்டி இல்லை" —வினோபாஜி.

ராஜாஜி டெல்லியில் இருந்தால் வெகு தூரம்வரை அவருடைய திருஷ்டி படும். துர் அதிர்ஷ்டம் சென்னையிலேயே தங்கிவிட்டார்!

* *

"இந்தோனேஷ்யாவில் அந்நியர் தலையீட்டை அனுமதியோம்."

—குருஷ்சேவ் எச்சரிக்கை

சூயஸ் பிரச்சினையைத் தீர்க்க பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் எகிப்து மீது படையெடுத்த பொழுது, ரஷ்யா கொடுத்த எச்சரிக்கையை உலகம் இன்னும் மறக்கவில்லை.

* *

"கம்பனும், பாரதியும் தமிழ் நாட்டின் சிந்தனை சிற்பிகள்."

—மதுரையில் மேனாட்டு தமிழ் அறிஞர் கெமில்.

சில சிந்தனை சிற்பிகளுக்கும், ஜாதி வெறியர்களுக்கும் கம்பனுடைய, பாரதியினுடைய கவிதைகள் தலைவேதனை.

* *

"நம்மவர் கழுதை நல்ல கழுதை, எருமைக் கண்ணுக்குட்டி பாருடாப்பா பாருடாப்பா!"

—தமிழ் சினிமா பாட்டு பற்றி சட்டசபையில் லட்சுமிபதி ராஜு (காங்)

நம்மவர் எல்லாம் நல்லவராக இருந்தால் நம்ம கழுதைகளெல்லாம் நல்ல கழுதைகளாகத்தான் இருக்கும். சென்ஸார் போர்டின் தயவில் சினிமா வளரும் விதம் இது.

* *

"அமெரிக்காவில் வருடத்திற்கு 10000 குழந்தைகள் கருப்புச் சந்தையில் குழந்தையில்லாத தாய் தந்தையர்களுக்கு விற்கப்படுகிறது" —செய்தி.

முதலாளித்துவ சமூகத்தின் 200 ஆண்டு சாதனை.

# இந்தியன் எக்ஸ்பிரஸ் ஊழியர் போனஸ் பிரச்சினை

## தொழில் கோர்ட் தீர்ப்புப் பற்றி சுப்ரீம் கோர்ட் முடிவு

புதுடெல்லி, மார்ச் 17—

சென்னை தொழில் கோர்ட் இந்தியன் எக்ஸ்பிரஸ் ஊழியர் போனஸ் முதலியவை சம்பந்தமாக அளித்த தீர்ப்புகளைப்பற்றி ஆட்சேபித்து இந்தியன் எக்ஸ்பிரஸ் முதலாளிகள் சுப்ரீம் கோர்ட்டில் ரிட் மனு தாக்கல் செய்திருந்தனர்.

போனஸ், பஞ்சப்படி தொழிலாளர்களை நிரந்தரமாக்குவது என்ற மூன்று விஷயங்களைப் பற்றியது இந்தத் தீர்ப்பு. மூன்றையும் முதலாளிகள் ஆட்சேபித்திருந்தனர். இது சம்பந்தமாக நீதிபதிகள் பகவதி, இமாம், கஜேந்திர கட்கார் மூவரும் இதை விசாரணை செய்தார்கள்.

முதலாளிகள் சார்பில் போனஸாக 56,000 கொடுக்க நேரிடும் என்றும் முடிவு வேறானால் இதைத் திரும்பப் பெறுவது கடினம் என்றும் வாதிக்கப்பட்டது. போனஸ் தொகை 22 ஆயிரம் தான் என்று தொழிலாளர் சார்பில் எடுத்துக் காட்டப்பட்டது.

போனஸ்விஷயத்தில் முதலாளிகள் 4 சதவிகித வட்டி கொடுப்பதாக இருந்தால் போனஸ் கொடுப்பதை நிறுத்தி வைக்கலாம் என்றும் மற்ற முடிவுகளைத் தடை செய்ய உத்தரவிட முடியாது என்றும் நீதிபதிகள் முடிவு கூறினார்கள்.

தொழிலாளர் சார்பில் மோகன் குமாரமங்கலமும், கம்பெனி சார்பில் ராஜேந்திர நாராயணனும் ஆஜரானார்கள்.

## சீர்காழியில் போலீஸ் சோதனை

சீர்காழி, மார்ச், 17—

இன்று காலை சர்க்கிள் இன்ஸ்பெக்டர் சப்-இன்ஸ்பெக்டருடன் வந்து தாலூகா கம்யூனிஸ்ட் அலுவலகத்தை சோதனையிட்டு கட்சி சம்பந்தமான கணக்கு புஸ்தகங்கள் உள்பட எல்லா ரிகார்டுகளையும் கைப்பற்றி சென்றிருக்கின்றனர். இது நகரில் பரபரப்பை உண்டுபண்ணியிருக்கிறது.

## ஜீவா இலக்கியச் சொற்பொழிவு

தூத்துக்குடி, மார்ச் 18—

இந்நகர் கம்யூனிஸ்ட் கட்சியின் ஆதரவில் "கம்பன் கண்ட தமிழகம்" என்னும் பொருள்பற்றி தோழர் ப. ஜீவானந்தம் 16-3-58 அன்று மாலை 6 மணியளவில் டெல்பின் தியேட்டரில் சொற்பொழிவாற்றினார்.

கம்பனின் காவிய நயத்தையும், கம்பன் காவியத்தை காமரசம் என்று சொல்லும் கூட்டத்தினர் எழுதும் ஆபாச களஞ்சியங்களையும் விளக்கி சுமார் 2½ மணி நேரம் பேசினார்.

கூட்டத்திற்கு கல்லூரி பேராசியர்களும், பட்டதாரிகளும், பொதுமக்களும், தொழிலாளர்களும், மாதர்களுமாக 2500-க்கு மேற்பட்டவர்கள் வந்திருந்தனர்.

முடிவில் பி. பீற்றர்முருயிஸ் நன்றிகூற கூட்டம் இனிது முடிவு பெற்றது.

## நடக்க இருப்பவை

### திருச்சியில் சிறப்புச் சொற்பொழிவுகள்

23-3-58 ஞாயிறு காலை 10 மணிக்கு திருச்சி தேவர் மன்றத்தில் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் நடைபெறும் சிறப்புக் கூட்டத்தில், "சட்டசபையில் நாம்" என்பதைப் பற்றித் தோழர் எம். கல்யாணசுந்தரம் (எம். எல். ஏ.) "தமிழகத்தில் நாம்" என்பது பற்றி தோழர் கே. டி. ராஜு பேசுவார்கள், நன்கொடை கட்டணம் அணா 2.

23-3-58 மாலை 6 மணிக்கு வாகனேரி முஸ்லீம் தெருவில் "இன்றைய அரசியல் நிலை" குறித்து எம். கல்யாணசுந்தரம் (எம். எல். ஏ.) கே. டி. ராஜு பேசுவார்கள்.

# பஞ்சாயத் உபதேர்தல்களில் கம்யூனிஸ்ட் கட்சிக்கே முதலிடம்

## கேரள சட்டசபையில் தகவல்

### கம்யூனிஸ்ட் செல்வாக்குக் குறைந்து வருகிறதென்ற பிரச்சாரம் தவிடுபொடி

திருவனந்தபுரம், மார்ச் 17— கேரள ராஜ்யத்தில் கம்யூனிஸ்ட் கட்சி மந்திரி சபை அமைத்து ஆட்சி நடத்தத் தொடங்கிய பிறகு நடைபெற்ற பஞ்சாயத்து உபதேர்தல்களில் அதிகப்படியான ஓட்டுகளையும், அதிகமான (சீட்) ஸ்தானங்களையும் கம்யூனிஸ்ட் கட்சி பெற்று முன்னணியில் நிற்கிறது.

இந்தத் தகவல் கேரள சட்டசபையில் கேள்வி நேரத்தின் போது தெரியவந்தது.

கம்யூனிஸ்ட்கள் பதவி ஏற்ற பின் நடைபெற்ற பஞ்சாயத் உப தேர்தல்கள் 119. இதில் 89 ஸ்தானங்களுக்கு அரசியல் கட்சிகள் போட்டியிட்டன, என்று மாத்யூ (காங்) கேட்ட கேள்விக்கு ஸ்தல ஸ்தாபன அமைச்சர் சாத்தன் பதிலளித்தார்.

இதில் 38 ஸ்தானங்கள் கம்யூனிஸ்ட் கட்சிக்கும், 33 காங்கிரஸிற்கும் மற்றவை இதர கட்சிகளுக்கும் கிடைத்தன என்றும், ஓட்டுகளைப் பொறுத்த வரையில் கம்யூனிஸ்ட் கட்சிக்கு அதிகப்படியான ஓட்டுகள் கிடைக்கப் பெற்று முதலிடம் பெற்றுள்ளது என்பதும் மந்திரி கூறிய தகவலில் இருந்து தெரிய வந்தது.

தேர்தலுக்குப் பின்னும் கம்யூனிஸ்ட் மந்திரி சபை நிறுவிய பின்னும் எதிர்ப்பு அதிகரித்து கட்சி செல்வாக்கிழந்து விட்டதாகப் பிரசாரம் செய்வோர் கூறும் கருத்து விட்டவர்களுக்கு இது ஒரு தக்க பதிலடி.

## காந்தி கிராமத்தில் செக்குத் தொழில் வார விழா

காந்தி கிராமம், மார்ச் 15— கதர், கிராமக் கைத்தொழில் குழுவின் சார்பில் 10-3-58 முதல் 16-3-58 வரை நடத்தப்பெறும் அகில இந்திய செக்குத் தொழில் வாரத்தை ஒட்டி, 13-3-58 அன்று காந்தி கிராமம், சின்னாளப்பட்டியிலும் செக்குவார விழாக்கொண்டாடப்பட்டது. ஊர்வலமும், பொதுக்கூட்டமும் நடைபெற்றன. சொக்கப்பட்டியில் திரு. சுந்தரமூர்த்தி செட்டியார் தலைமையில் பலர், செக்குத் தொழில் அபிவிருத்தி பற்றிப் பேசினர்.

## பத்திரிகையாளர் சம்பள போர்டு முடிவு

### செல்லாது என்று சுப்ரீம் நீதி மன்றம் தீர்ப்பு

புதுடெல்லி, மார்ச் 18— உழைக்கும் பத்திரிகையாளர் சட்டத்தின் பிரகாரம் நிறுவப் பெற்ற சம்பள போர்டு முடிவுகளை நிராகரித்துச் சுப்ரீம் நீதி மன்றம் முடிவு செய்துள்ளது. பத்திரிகை நிறுவனங்களின் கொடுக்கும் சக்தியைக் கணக்கிலெடுத்துக் கொள்ளாததே காரணம் என்று குறிப்பிடப்பட்டது. பத்திரிகையாளர் நலவுரிமைகள் சம்பந்தப்பட்ட சட்டம் பொதுவாக சட்ட விரோதமல்ல என்று குறிப்பிட்டுள்ளது.

## மே தினத்தைச் சிறப்பாக கொண்டாட

### மாதவரம் தொழிற் சங்கப் பிரதிநிதிகள் முடிவு

மாதவரம், மார்ச் 17— மாதவரம் வட்டாரத்திலுள்ள தோல் பதனிடும் தொழிலாளர் சங்கம், வேஸ்ட் காட்டன் தொழிலாளர் சங்கம், புழல் பேனா-மை தொழிற் சங்கம், ரெட்ஹில்ஸ் ரைஸ் மில் தொழிலாளர் சங்கம், பீடி லேபர் யூனியன் ஆகிய சங்கங்களின் பிரதிநிதிகள் 16-3-58-ல் தோழர் மு. முத்து அவர்கள் தலைமையில் கூடி, இவ்வருட மே தினத்தை எல்லாத் தொழிற்சங்கங்களின் சார்பிலும், கூட்டான முறையில் மிகவும் சிறப்பாக நடத்துவதென்று முடிவு செய்யப்பட்டது.

தோழர் சி. கே. மாதவனை செயலாளராகவும், மற்றும் ஆறு பேர்களைக் கொண்ட ஒரு மே தின விழாக் குழுவும் அமைக்கப்பட்டது.

மே தினத்தைப் பொது விடுமுறையாகப் பிரகடனப் படுத்தக்கோரி சர்க்காரையும், முதலாளிகளையும் கேட்டு ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

# செய்திச் சுருள்

சென்னை, மார்ச் 19— சத்திரப்பட்டி புதுத்தெரு வாலிபர் சங்க மகாசபைக் கூட்டம் 9-3-58ல் ச. மாடசாமி தலைமையில் நடைபெற்றது. 1958—59 வருடத்திற்கு ச. மாடசாமி தலைவராகவும், கு. பழனிச்சாமி உபதலைவராகவும், அ. லட்சுமணன் செயலாளராகவும், கு. குருநாதன் உதவி செயலாளராகவும், மா. நடராஜ் பொருளாளராகவும், மற்றும் நால்வர் கமிட்டி உறுப்பினர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

ஆஜாத் அவர்கள் மறைவிற்கும் பொன்னுவின் அகால மரணத்திற்கும் அனுதாபம் தெரிவிக்கும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

●

இங்கு ஜெனரல் ஒர்க்கர்ஸ் யூனியன் சார்பில் ஓட்டல் தொழிலாளர்கள் மாபெரும் ஊர்வலம் ஒன்று நேற்று நடைபெற்றது. எட்டு மணி நேர வேலையை அமுல் நடத்துக! குறைந்தபட்சம் சம்பளம் நிர்ணயிக்க வேண்டும்! ஓட்டல் தொழிலாளர் மசோதாவை உடனே சட்டமாக்கு என்ற கோஷங்கள் முழக்கப்பட்டன. கிருஷ்ணமூர்த்தி, வாசுதேவன் மன்னார்சாமி சாமுவேல் முதலிய பலர் தலைமை வகித்து நடத்தினர்கள்.

●

மார்ச் 14ம் தேதி ஆம்பளாபட்டு கிராமத்தில் தோழர் வெ. அ. சுப்பையன் தலைமையில் நடைபெற்ற கூட்டத்தில் ஜனநாயக வாலிபர் சங்கம் அமைக்கப்பட்டது. சங்கத்திற்கு ஆர். ஏ. சுப்பையன் தலைவராகவும், சி. ராஜகோபால் உபதலைவராகவும், க. மா. அ. சுப்பையன் காரியதரிசியாகவும், வி. அய்யாவு உபகாரியதரிசியாகவும் கே. காசிநாதன் பொக்கிஷதாரராகவும் மற்றும் 6 பேர் நிர்வாகக் குழு உறுப்பினர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். தோழர் எஸ். ஏ. முருகையன் வாலிபர்கள் கடமை பற்றிப் பேசினர்.

●

கம்யூனிஸ்ட் கட்சி ஆடுதுறை கிளைக் கமிட்டிக் கூட்டம் தோழர் ராஜாங்கம் தலைமையில் மார்ச். 1-ம் தேதி நடைபெற்ற போது ஆடுதுறை பஞ்சாயத்து போர்டு வாசகசாலைக்கு ஜனசக்தி பத்திரிகை வாங்கிப் போடும் படியும், மார்ச் 31-ம் தேதிக்குள் ஜனசக்தி கட்டிட நிதிக்கு ரூ. 50 வசூலித்து அனுப்புவதென்றும் தீர்மானங்கள் நிறைவேறின.

●

கம்யூனிஸ்ட் கட்சி புளியம்பட்டி கமிட்டியின் செயற்குழுக் கூட்டம் பிப்ரவரி 28-ம் தேதி நடைபெற்றது. செல்லம்பாளையத்தில் விவசாய சங்கப் பொதுக் கூட்டத்திற்குத் தடை விதிக்கப்பட்டதைக் கண்டித்து தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

●

சிவகங்கை தாலுக்கா கம்யூனிஸ்ட் கட்சிக் கூட்டம் மார்ச் 9-ம் தேதி எம். ஆர். ஆண்டவன் தலைமையில் நடைபெற்றது பருவ மழை தவறியதால் பாதிக்கப்பட்டுள்ள பெரிய கண்ணனூர் முதலிய கிராமங்களை பஞ்சப்பிரதேசங்கள் என்று அறிவித்து கடன் பாக்கிகள், வரிகள்முதலியவற்றை வசூலிப்பதை நிறுத்தி வைக்கும் படி சர்க்காரை வற்புறுத்தி தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

●

கோவில்பட்டி தாலுக்கா கம்யூனிஸ்ட் கட்சி கூட்டம் மார்ச் 2-ம் தேதி எட்டயபுரத்தில் நடைபெற்றது. தோழர் பொன்னுவின் மறைவிற்கு அனுதாபம் தெரிவித்தும், தாலுக்காவில் வட்டாரக் கமிட்டிகள் அமைப்பதென்றும், கட்சியின் ஸ்தாபன வேலைகளுக்காக நிதி வசூலிப்பதென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

●

கம்யூனிஸ்ட் கட்சி ஸ்ரீவைகுண்டம் கிளையின் பேரவைக்கூட்டம் மார்ச் 2-ம் தேதி நடைபெற்றது. விவசாய சங்க அங்கத்தினர்கள் சேர்க்கும் இயக்கத்தை தீவிரப்படுத்துவதென்றும், சிறு சேமிப்பு நிதிக்கு ஸ்தல அதிகாரிகள் கட்டாய வசூல் செய்வதைக் கண்டித்தும் தீர்மானங்கள் நிறைவேறின.

# சிதம்பரம் தாலுகா விவசாய சங்கத் தலைவர்கள் விடுதலை

## அப்பீலில் தண்டனை ரத்து

சிதம்பரம், மார்ச் 17— சிதம்பரம் தாலுகா பொன்னந்திட்டு கிராம விவசாயிகள் சங்கத் தலைவர் ஏ. ஆழ்வார் நாடார் 1, செயலாளர் சாதுத்துரை 2, அய்யாறு படையாச்சி 3, சந்திரஹாசன் 4, ஜெயராமன் 5, அஞ்சாபுலி 6, கந்தன் 7, ஆறுமுகம் 8, கொட்டாபுளி 9, மாரி படையாச்சி 10, வைத்தி படையாச்சி, 11. ஆகியவர்கள் மீது, ஹபீபுல்லா மரக்காயர் என்பவரின் நிலத்தில் பிரவேசித்து அஞ்சாபுளி, கூத்தான், குப்புசாமி ஆகியவர்களைக் கழி, கத்தியால் தாக்கியதாக வழக்குத் தொடரப்பட்டது.

7-2-58ல் கடலூர் அடிஷனல் ஜில்லா நீதிபதி ஓ. வி. பாலுசாமி அவர்களால், மேலே குறிப்பிட்டவர்களில் மூவருக்கு (1, 6, 8) 2 வருட கடுங்காவல் தண்டனையும், மற்றவர்களுக்கு 6 மாதம் முதல் 1 வருடம் வரையிலும் தண்டனை அளிக்கப்பட்டது.

இத் தண்டனையை எதிர்த்து அப்பீல் செய்யப்பட்டது. அந்த அப்பீலில் 15-3-58 அன்று தெ. ஆற்காடு செஷன்ஸ் நீதிபதி திரு எஸ். சதாசிவம் அவர்கள், மேலே கூறப்பட்ட எல்லோரையும் விடுதலை செய்து தீர்ப்பளித்தார். அவர்கள் மீது சாட்டப்பட்ட குற்றச்சாட்டுகளை நம்புவதற்கில்லையென்றும் அவர் தன்னுடைய தீர்ப்பில் கூறியுள்ளார்.

அவர்களுடன் சேர்ந்த டி. எம். சோமசுந்தரம், டி. ஆர். விஸ்வநாதன், மற்றும் 13 விவசாய சங்க தலைவர்களை ஏற்கனவே அடிஷனல் ஜட்ஜ் திரு. ஓ. வி. பாலுசாமி அவர்கள் விடுதலை செய்ததும் குறிப்பிடத்தக்கது.

சிதம்பரம் பிரபல வழக்கறிஞர் வி. கே. நாகராஜய்யர் விவசாய சங்கத் தலைவர்களுக்காக ஆஜராகி வாதாடினார்.

## கோடம்பாக்கம் ...

(1ம் பக்கத் தொடர்ச்சி)

நான் அந்த கான்ஸ்டேபிளிடம் கூறினேன்.

பின்னர் பிப்ரவரி 20-ம் தேதி இரவு $10\frac{1}{2}$ மணிக்கு போலீஸ் கான்ஸ்டேபிள் ஜெகன்னாதன் என்னை கோடம்பாக்கம் போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துச் சென்றார். அங்கே, ஆறுமுகம் இறந்து விட்டதாக ஆளவந்தாரிடம் சப் இன்ஸ்பெக்டர் நடராஜன் கூறிக் கொண்டிருந்ததைக் கேட்டேன். அதுபற்றி கவலைப்படாதிருக்கும்படி ஆளவந்தார் கூறினார். தன்னிடம் வேலை பார்க்கும் ஆறுமுகத்தின் தகப்பனார் வேதாசலத்திற்கு லஞ்சம் கொடுப்பதாக வாக்களித்தார். இவ்விதம் கோவிந்தன் கூறினார்.

முற்பகலில் ஹோட்டல் சர்வர் எம். பி. சிவசாமி, லாண்டரிக்காரர் பி. கே. சாமி, டைம்கிப்பர் கோவிந்தராஜு, சைக்கிள் கடைக்காரர் மாரி நாயக்கர் ஆகியோர் விசாரிக்கப்பட்டனர்.

விசாரணை மார்ச் 24-ம்தேதிக்கு ஒத்திவைக்கப்பட்டது.

# கம்யூனிஸ்ட் கட்சி பொதுக்கூட்டங்கள்

சென்னை, மார்ச் 19—

### அட்டப்பட்டி

மேலூர் தாலூகா அட்டப்பட்டியில் கம்யூனிஸ்ட் கட்சிப் பொதுக்கூட்டம் மார்ச் 17ம் தேதி நடைபெற்றது. தோழர் கே. இராமலிங்கம் செங்கொடி ஏற்றிவைத்தார். தமிழ்நாடு விவசாயிகள் சங்க உப தலைவர் ஆர். ராமராஜ் பேசினார். மதுரை காளிமுத்து இரவு 12 மணி வரை கட்சிப் பாடல்கள் பாடினார்.

### எரியோடு

கம்யூனிஸ்ட் கட்சி எரியோடு கிளை சார்பில் தோழர் கி. கெண்டயசாமி தலைமையில் மார்ச் 7ம் தேதி நடைபெற்றது, சிறு சேமிப்பு கட்டாய நிதி வசூலை கண்டித்தும், எரியோடு கிராமத்திற்கு பஞ்சாயத்து போர்டு வேண்டிய அவசியத்தை வற்புறுத்தியும், முந்திரா மோசடி பற்றியும், காங்கிரஸ், தி.மு.க. போக்கு பற்றியும் தோழர்கள் பி. முத்துச்சாமி, எம். பி. மணிவேல், கே. பி. ஜானகி அம்மாள் ஆகியோர் பேசினர்.

### ஏனங்குடி

தஞ்சை மாவட்டம் ஏனங்குடி கிராமத்தில் மார்ச் 17ம் தேதி கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர் கோடியான் தலைமை வகித்தார். தோழர்கள் அப்பாசாமி, டி. எஸ். அருணாசலம், இலரா ஆகியோர் பேசினர். அப்போது கூட்டத்தில் சில கற்கள் வந்து விழுந்தன. கற்களை வீசினதாகக் கூறப்படும் தி. மு. க.வைச் சேர்ந்த பக்கிரிசாமி என்பவர் கையும் மெய்யுமாகப் பிடிக்கப்பட்டு போலீஸாரிடம் ஒப்படைக்கப்பட்டார். இத்தகைய காலித்தனத்தைக் கண்டு மக்களிடையே அதிருப்தி ஏற்பட்டுள்ளது.

### திருவையாறு

திருவையாறில் மார்ச் 16-ம் தேதி தோழர் கே. உலகநாதன் தலைமையில் கம்யூனிஸ்ட் கட்சி பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர் எம். எஸ். கணபதி, என். வெங்கடாசலம், மன்னை இலரா ஆகியோர் கம்யூனிஸ்ட் கட்சியின் கொள்கை, திட்டம் பற்றியும் திருவையாறில் சுகாதார விஷயத்தில் பஞ்சாயத்து போர்டு போதிய கவனம் செலுத்த வற்புறுத்தியும் பேசினர்.

### அவிநாசி

அவிநாசி நகர் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் மார்ச் 13-ம் தேதி பொதுக்கூட்டம் நடைபெற்றது. ஆர். பரமசிவம் தலைமை வகித்தார். செல்லப்பம்பாளையத்தில் நடைபெறுவதாக இருந்த விவசாய சங்கப் பொதுக்கூட்டமும் நாடகமும் தடை செய்யப்பட்டதைக் கண்டித்து எல். அரபு பேசினர். குடி தண்ணீர் வசதிகள் செய்து தாராதிருக்கும்போது அவிநாசி பஞ்சாயத்து போர்டு குடி தண்ணீர் பராமரிப்பு வரி விதிப்பதைக் கண்டித்து தோழர் ஐ. எம். ஷரீபும், விவசாய இயக்கத்தைப் பலப்படுத்த வேண்டிய அவசியம் பற்றி தோழர் மாறப்பன், நஸீர் முதலியோரும் பேசினர்.

## உற்பத்தி ...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

ஆகவே பத்திரிகைக் காகிதத்தை ஒரு அத்தியாவசிய சாதனமென்று சர்க்கார் பிரகடனப்படுத்தி, அதன் விலைகளைக் கட்டுப்படுத்த வேண்டும்'' என்றும் வி.பி. நாயர் கூறினார்.

உருக்கு முதலாளிகளுக்குஉருக்குக்கு அதிக விலை நிர்ணயம் செய்திருப்பதைநாயர்கண்டித்தார்,1952, 53 விலைகளுடன் ஒப்பிடும்போது உருக்கின் விலை டன்னுக்கு ரூ 75 அதிகம், இதனால் டாட்டாவுக்கும் இந்திய இரும்பு, உருக்கு கம்பெனிக்கும் சுமார் ரூ. 160 கோடி அதிகம் கிடைக்கச் செய்திருப்பதற்கு அவசியமென்ன, என்று நாயர் கேட்டார்.

பல பஞ்சாலைகள் நாட்டில் மூடப்பட்டிருப்பதற்கு, தனியார் துறை முதலாளிகளின் முறைகேடான நிர்வாகமே காரணமென்றார்.

''மந்திரிசபையின் தொழில் கொள்கை ஒரு சில முதலாளிகளை ஏகபோக முதலாளிகளாக மாறுவதற்கு ஊக்கமூட்டுவதாக இருக்கிறது. சிறு முதலாளிகள் புதிய தொழில்களை ஆரம்பிக்க ஊக்கமூட்டப்படுவதில்லை. அவர்கள் புறக்கணிக்கப்படுகிறார்கள்'' என்றும் கூறினார்.

( 4-ம் பக்கத் தொடர்ச்சி)

கள் என் ஜி. ஓ கள். (இச்சமயத் தில் தலைமைவகித்த திரு. ராஜகோபால், 'அதற்கு பதிலே அனுப்பவில்லை' என்றார்) ஆ! அதுதான் சரியான பதில்.

### மந்திரிகளுக்கு போலீஸ் ஏன்?

மந்திரிகளுக்கு போலீஸ் காவல் ஏன்? எதிர்க்கட்சிகள் இருப்பதினால்தான் பாதுகாப்பு தேவையென்று மந்திரிகள் கூறலாம். இதோ, எங்கள் எதிர்க்கட்சிதான் எப்படி இருக்கிறது? ஒரே மேடையில் பல கட்சியினரும் கூடியிருக்கிறோமே தவிர, எங்களுக்குள் எவ்வளவு தகராறு! எதிரும் புதிருமாகவேதானே இருக்கிறோம்! இருந்தாலும் போலீஸ் காவலுடனா போகிறோம், சும்மாதானே போகிறோம். (சிரிப்பு) மந்திரியானவுடன் உங்களுக்குப் போலீஸ் வேண்டுமா? (கரகோஷம்) காரணம் சட்டசபையில்தான் 150. வெளியில் அந்தஅளவு பலமில்லை. அதனால்தான் பயம்.

### சிந்தனை சுதந்திரம்

சர்க்கார் உத்தியோகத்தில் சேர்ந்தவுடன் அடிமையாகி விட வேண்டுமென்று அர்த்தமா? இதோ இந்த அரசியல் சட்டத்தில் பேச்சுரிமை, ஸ்தாபன உரிமை, வழிபாடு உரிமை ஆகிய உரிமைகள் கொடுக்கப்பட்டிருக்கிறது. வேலை சமயத்தில் நாணயமாக வேலை வாங்கிக்கொள்ள வேண்டியது சர்க்கார் உரிமை, வேலை முடிந்த பிற்பாடு எந்தக் கூட்டத்திற்கும் போக உங்களுக்குஉரிமை உண்டு. அதை அவர்கள் அங்கீகரிக்கவேண்டும். இல்லாவிட்டால் ஜனநாயகம் ஏது? வேலை நேரத்தில் ஊழியர்கள் அரசியல் வேற்றுமை காட்டக்கூடாது. மந்திரிகள் அரசியல் வேற்றுமை காட்டுகிறார்கள், அதனால்தான் கண்டிக்கிறோம்.

இரண்டாவது திட்டத்துக்கு ஒதுக்கிய 150 கோடியில், 6 கோடியை என். ஜி ஓ.களுக்கு ஒதுக்குங்கள். உற்சாகம் ஏற்படும். ஊழல்களை ஒழித்துக்கட்ட உதவி செய்வார்கள்.

கம்யூனிஸ்ட் கட்சியினராகிய நாங்கள் உங்களுக்கு முழு ஆதரவு தருகிறோம், உங்கள் மீது மந்திரிகள் அவதூறு பொழிந்தால், அதை முறியடிக்க எங்கள் சக்தி முழுவதையும் திரட்டுவோம் என கடலோசை போன்ற கரகோஷத்திற்கிடையே கல்யாணசுந்தரம் பேசி முடித்தார்.

# பயத்தினுல்தான் மிரட்டுகிருர்கள்!

## இரு சர்க்காரையும் எதிர்த்து உறுதியாகப் போராடுங்கள்!

## என்.ஜி.ஓ. அணிவகுப்பில் எம். கல்யாணசுந்தரம்

*சென்னை, மார்ச் 20—*

திருவல்லிக்கேணி கடற்கரையில் சர்க்கார் ஊழியர்கள் சங்கங்களின் சார்பில் 19-3-58-ல் நடைபெற்ற லட்சம்பேர்திரண்ட பிரம்மாண்டமான பொதுக்கூட்டத்தில் கம்யூனிஸ்ட் தலைவர் திரு. எம். கல்யாணசுந்தரம் ஆற்றிய சொற்பொழிவின் ஒரு பகுதியை நேற்று வெளியிட்டிருந்தோம். அதன் விபரமாவது :—

### பயத்தினுல் மிரட்டுகிருர்கள்

"என். ஜி. ஓ. சகோதரர்களே! பெரியோர்களே! இவ்வளவு அலங்காரமான காட்சியை, சென்னை நகரில் வேறு எந்தக் கூட்டத்திலும் நான் பார்த்ததில்லை, உங்களிடையே கட்டுப்பாடும், உற்சாகமும், அமைதியும் உன்னதமாக இருக்கிறது. இவ்வளவு சிறப்பான ஏற்பாடுகளைச் செய்யவல்ல உங்களிடம் அரசாங்கப் பொறுப்பை ஒப்படைத்தால் எவ்வளவோ சிறப்பாக நிறைவேற்றுவீர்கள். உங்களிடமிருந்து மந்திரிகள் கற்றுக் கொள்ளுவதற்குப் பதிலாக உங்களை மிரட்டுகிருர்கள். அவர்கள் பலசாலிகளாக இருப்பதால்தான் உங்களை மிரட்டுவதாக நினைக்காதீர்கள். பயத்தினுல் மிரட்டுகிருர்கள். பயந்தவர்கள் மிரட்டுகிருர்கள். நிற்க.

### 6 வருடமாகப் போராடினோம்

உங்களுடைய கோரிக்கைகள் நியாயமானது. கடந்த 6 வருடமாக சட்ட சபையில் உங்கள் பிரச்னைகளுக்காக கம்யூனிஸ்டுகளாகிய நாங்கள் போராடி வந்திருக்கிருேமென்பதை, செக்ரடேரியட்டில் உள்ளவர்கள் நேரில் அறிவார்கள். இங்கு நான் பேசுவது உங்களுடைய கோரிக்கை எப்படி நியாயமானது என்பதை எடுத்துக்காட்ட அல்ல. உங்களின் நியாயத்தை உணராதவர்களுக்கு விளக்குவதற்காகவே பேசுகிறேன். அதுதான் எங்கள் வேலை. மந்திரிகள் உங்கள் நியாயத்தை ஒப்புக்கொள்ளவில்லை. ஒரே வேலையைச் செய்யக் கூடிய மத்திய சர்க்கார் ஊழியர்களுக்கும் உங்களுக்குமிடையே சம்பளம், பஞ்சப்படி விஷயங்களில் தாரதம்மியம் காட்டப்படுகிறது.

நேற்று சட்டசபையில் சர்க்கார் அளித்த பதில் உங்கள் வெற்றி. நான் எப்பொழுதோ கேள்வி கேட்டேன். உங்களுக்கு திருப்தி ஏற்படுத்துவதற்காக நேற்றுத்தான் பதில் அளித்தார்.

### தவருன புள்ளி விபரம்

நிதியமைச்சர் எனக்களித்த பதிலில், மத்திய சர்க்கார் ஊழியர்களுக்கும் உங்களுக்குமுள்ள சம்பள தாரதம்மியம் தவருக வெளியிடப்பட்டிருக்கிறது. மத்திய சர்க்கார் ஊழியருக்கு 90 ரூபாய் வரை கிடைக்கிறது. ஆனுல் ரூ 75 என்று காட்டப்படுகிறது. வேறு பல அலவன்ஸ்களைச் சேர்க்கவில்லை. அப்படியிருந்தும் 28 ரூபாய் வரையிலும் தாரதம்மியமிருக்கிறது. மத்திய சர்க்காரில் வேலை செய்யும் பியூனுக்குக் கிடைப்பதைவிட ராஜ்ய என். ஜி ஓ.களுக்கு குறைவாகக் கிடைக்கிறது.

### இரு சர்க்காரை எதிர்த்து

இதுபற்றி சட்ட சபையிலே கேட்டால், 'ஆசிரியர்களுக்கு அவ்வளவுதானே தருகிருேம், ஹெட் கான்ஸ்டபிளின் சம்பளத்தைப் பாருங்கள்!' என்று மந்திரிகள் பதில் அளிக்கிருர்கள். மத்திய சர்க்கார் ஒப்புக் கொண்டால் தான் 5 ரூபாய் இடைக்கால நிவாரணம் தருவார்களாம்.

ஆகவே, மத்திய சர்க்காரையும் சென்னைசர்க்காரையும் எதிர்த்தே நீங்கள் போராட்டம் நடத்த வேண்டும்.

### என். எம். ஜோஷி

1946-ம் வருஷத்தில் முதல் சம்பளக் கமிஷன் அமைத்தார்கள் ஆங்கில ஆட்சியாளர்கள், என்ற போதிலும் அதில் ஒரு தொழிலாளர் பிரதிநிதியைப் போட்டார்கள். இந்த நாட்டிலே எந்தக் காலத்திலும் தொழிலாளரைக் கைவிடாத இரண்டு தலைவர்கள் உண்டு. ஒருவர் சக்கரை செட்டியார். இன்ெருருவர் என். எம். ஜோஷி. அந்தக் குழுவில் என். எம். ஜோஷி இருந்தார். 1947-ல் சம்பளக் கமிஷன் சில நல்ல முடிவுகளை வெளியிட்டது. தேசம் பூராவும் பற்பல விதமான சம்பளமும் வேலை நிலைமைகளுமிருந்ததை, ஒரே மாதிரியான வேலை, ஒரே மாதிரியான சம்பளம் என்ற கொள்கையை வகுத்தது. இது பெரிய சாதனை. இதற்குக் காரணம் அந்தக் குழுவில் ஒரு தொழிலாளிப் பிரதிநிதி என்.எம். ஜோஷி இருந்தார்.

முதல் சம்பளக் கமிஷனில் சென்னை மந்திரிகளும் இருந்தார்கள். எல்லா மந்திரி சபைகளிலும் மந்திரியாக இருந்துவரும் பக்தவத்சலமும், அன்றைய நிதியமைச்சர் கோபால்ரெட்டியும் அதில் வாதாடும்போது, பஞ்சப்படியை உயர்த்தக்கூடாதுஎன்று வற்புறுத்தினுர்கள். அப்படியிருந்தும் என். எம். ஜோஷி இருந்ததால் இவர்கள் முயற்சி பலிக்கவில்லை.

### 2-வது சம்பளக்குழுவிலே உழைப்பாளி ஆள் இல்லை

இரண்டாவது சம்பளக் கமிஷனைப் பாருங்கள்! அதில் உள்ளயாரும் தொழிலாளர் பிரதிநிதி இல்லை. தொழிற்சங்க இயக்கத்தைத் தெரிந்தவர்கள் யாருமில்லை.

### போக்கும் விதம்

மத்திய சர்க்கார் சிப்பந்திகளுக்கும் ராஜ்ய சர்க்கார் சிப்பந்திகளுக்குமிடையேயுள்ள ஏற்றத்தாழ்வை போக்கப் போகிருேம் என்கிருர்கள். இரண்டு விதமாகப் போக்கலாம். ஒன்று நம்முடைய ஊதியத்தை அவர்களுடைய ஊதிய அளவுக்கு உயர்த்துவதின் மூலம் ஏற்றத்தாழ்வைப் போக்கலாம். இன்ெனுன்று நம்முடைய ஊதிய அளவுக்கு அவர்களுடைய ஊதியத்தைக் குறைத்தும் ஏற்றத்தாழ்வைப் போக்கலாம். இப்படிச் செய்துவிடுவார்களோ என்றுகூட மத்தியசர்க்கார் சிப்பந்திகள் பயப்படுகிருர்கள்.

### கேட்டது 20 கிடைத்ததோ 5

மத்திய சர்க்கார் ஊழியர்களுக்கு முதல் சம்பளக் கமிஷன் சிபாரிசு செய்த அளவு பஞ்சப்படி கொடுக்கவில்லை. அதில் ஒரு 20 ரூபாய் குறைத்துத்தான் இது வரை கொடுக்கப்பட்டுவருகிறது. அந்த 20 ரூபாயை இடைக்கால நிவாரணமாகக் கொடு என்று கேட்டார்கள். ஆனுல் 5 ரூபாய் தான் கிடைத்தது. அதனுல் அங்கு அதிர்ப்தி அதிகமாயிருக்கிறது.

### எதை ஆதரித்தோம்!

2-வது சம்பளக் கமிஷனில் ராஜ்ய சர்க்கார் சிப்பந்திகள் பிரச்னைகளையும் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

மத்திய மந்திரிகளோ, ராஜ்ய மந்திரிகளோ நியாயமில்லை என்று கருதக்கூடிய எதையும் நீங்கள் கேட்கவில்லை. நாங்களும் ஆதரிக்கவில்லை, பின் ஏன் எங்கள்மீது ஆத்திரம்? என். ஜி. ஓ கள்மீது ஆத்திரம்!

### சரியான பதில்

புருஷோத்தம் முதலியார் ஆளும் கட்சியைச் சேர்ந்தவர். அவர் செங்கல்பட்டு என். ஜி ஓ. பொதுக்கூட்டத்தில் பேசினுர். அதற்காக அந்த ஸ்தாபனத்துக்கே சார்ஜ்ஷீட் கொடுத்தது சர்க்கார்.

மதுரை என். ஜி. ஓ மகாநாட்டில் திரு. அண்ணுத்துரையும், பி. ராமமூர்த்தியும் கலந்து கொண்டார்கள். அதற்காகவும் அந்த ஸ்தாபனத்துக்கே சார்ஜ்ஷீட் கொடுத்தார்கள். தனி நபர்களுக்குதான் கொடுப்பார்கள் என்று பேரு இந்த சர்க்கார் என்னுடான்னு, ஸ்தாபனத்துக்கே கொடுக்கிறது. (சிரிப்பு)

ஆனுல் அந்த சார்ஜ்ஷீட்டுக்கு என்ன மரியாதை கொடுக்க வேண்டுமோ அதைக்கொடுத்தார்

(3-ப் பக்கம் பார்க்க)

---

கோவை—சேலம்—நீலகிரி

ஸ்தல ஸ்தாபனத் தொகுதி — மேல்சபைத் தேர்வு

### திரு. ஆர். கிருஷ்ணசாமிக் கவுண்டருக்கு ஆதரவு தாரீர்!

கோவை—சேலம்—நீலகிரி ஸ்தல ஸ்தாபனத் தொகுதியிலிருந்து சென்னை மேல்சபைத் தேர்தலில் போட்டியிடும் கணபதி பஞ்சாயத்து போர்டு தலைவர் திரு. ஆர். கிருஷ்ணசாமிக் கவுண்டர் அவர்களை ஆதரிப்பதென கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ்நாடு கமிட்டி தீர்மானித்துள்ளது. இத் தொகுதியிலுள்ள நகரசபை, மேஜர் பஞ்சாயத்துகளில் அங்கம் வகிக்கும் கட்சி அங்கத்தினர்களும், அனுதாபிகளும், நண்பர்களும் திரு. ஆர். கிருஷ்ணசாமிக் கவுண்டர் அவர்களுக்குத் தங்கள் வோட்டுகளைப் பதிவுசெய்து அவர்கள் வெற்றிபெற ஆவன செய்ய வேண்டுமெனக் கேட்டுக் கொள்கிறேன்.

எம். ஆர். வெங்கட்ராமன்,
காரியதரிசி,
தமிழ்நாடு கமிட்டி,
இந்திய கம்யூனிஸ்ட் கட்சி.

---

## தீப்பெட்டித் தொழில், கைத்தறி பற்றி

### தங்கமணி, பார்வதி கிருஷ்ணன் பாராளுமன்றத்தில் கேள்விகள்

*புதுடெல்லி, மார்ச் 18—*

தென்னிந்திய தீப்பெட்டித்தொழில் அதிபர்கள் மத்திய அமைச்சரைச் சந்தித்தபோது பல ராஜ்யங்களில் விற்பனை வரி விகிதம் பலவிதமாக இருப்பதால் சர்க்கரை, புகையிலைக்கு விதிப்பது போலவே தீப்பெட்டிக்கும் எக்சைஸ் வரி விதிக்க வேண்டுமென்று கோரினுர்களா என்று தோழர் தங்கமணி ஒரு கேள்வி கேட்டார்.

அதற்கு அமைச்சர் ஆம் என்று பதிலளித்தார்.

கேள்வி: பி. சி. டி. பாக்டரிகளுக்கு ரிபேட் புதிய சைஸ்களுக்கும் அதிகப்படுத்தக் கோரினுர்களா?

பதில்: சிறு குடிசை பாக்டரிகள் பாதிக்கப்படுவதைப்பற்றித் தெரிவித்தார்கள்:

கே. டி. கே. கேள்வி: மார்ச் 13 பதில் கொடுத்தபோது 8 பாக்டரிகளில் 1 கோடியே 40 லட்சம் குரோசும்; மற்ற நூற்றுக்கணக்கான குடிசை பாக்டரிகளில் 1 கோடியே 12 லட்சமும் உற்பத்தியானதாகக் கூறப்பட்டதே? இதில் யந்திரத் தொழில் பகுதி குறைக்கப்படுமா?

அமைச்சர் பதில்: பெரிய பாக்டரிகளில் 1957-ல் உற்பத்தி அதிகம் என்பது வாஸ்தவம்தான். சர்க்கார் குடிசைத்தொழில் பாதுகாப்பிற்கு சகல ஏற்பாடும் செய்யும்.

### திண்டுக்கல் பூட்டு தங்கமணி கேள்வி

திண்டுக்கல் பூட்டு பாக்டரியில் இவ்வருடம் எவ்வளவு உற்பத்தியாகும்? இதுவரை எவ்வளவு? எத்தனை பேர் ஈடுபட்டிருக்கின்றனர்

அமைச்சர் ஷாவின் பதில்: ரூ. 1 லட்சத்திற்கு அதிகம் மதிப்புள்ள பூட்டுகள் உற்பத்தியாகியுள்ளது. 50 பேர் வேலை செய்கின்றனர்.

### கைதறிக்கு ரிபேட்

கேள்வி: சென்னை சர்க்காரும் சட்டசபையும், கைத்தறி ரிபேட் பழையபடி இருக்கவேண்டுமெனவும், ராஜ்ய மட்டத்தில், கைத்தறி கார்ப்பொரேஷன் அமைத்து விற்பனையைக் கவனிக்க வேண்டுமெனவும் கோரியதுண்டா?

மொரார்ஜி தேசாய்: ஆம், நாங்கள் அதிலுள்ள கஷ்டத்தை விபரமாக சென்னை மந்திரிக்குத் தெரிவித்துள்ளோம்.

### பார்வதி கிருஷ்ணன்

கேள்வி: மாஸ்டர் வீவர் கீழுள்ள கைத்தறிகளுக்கு ரிபேட் கொடுக்கப்படுமா?

பதில்: இல்லை.

கேள்வி: கொச்சி துறைமுகத்தில் காண்ட்ராக்டர்கள் அவார்டுபடி நடக்கவில்லையே! அவர்களை தண்டிப்பீர்களா?

பதில்: ஆம். நடவடிக்கை நோட்டீஸ் கொடுத்துள்ளோம்.

---

### மக்கள் சீனுவில் 7½ லட்சம் ரேடியோ செட் உற்பத்தி

*பீகிங், மார்ச் 18—*

மக்கள் சீனுவில் இந்த ஆண்டில் 7½ லட்சம் ரேடியோ செட்டுகள் உற்பத்தி செய்யப்படும். 4 முதல் 8 வால்வுகளுள்ள உயர்தர செட்டுகள் தயாரிக்கப்படும் என்று தெரிகிறது. 1956-ம் ஆண்டில்தான் ரேடியோ செட்டுகளை முற்றிலும் தயாரிக்க சீனு இறங்கியது. இதற்குள் இத்தனை முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது.

---

## சர்க்கார் கட்டிடங்களிலுள்ளவர்களை அநியாயமாக விரட்டாதீர்!

### பார்லிமெண்டில் கே.டி.கே.தங்கமணி

*புதுடெல்லி மார்ச் 18—*

சர்க்கார் கட்டிடத்தை ஆக்ரமித்துக் கொண்டிருப்பவர்களை வெளியேற்றுவதுபற்றிய திருத்த மசோதாமீது தோழர் கே. டி கே. தங்கமணி பேசினுர். "அலகாபாத், பஞ்சாப், கல்கத்தா உயர்நீதி மன்றங்கள் இந்த சட்டம் செல்லாது என்று தீர்ப்புக் கூறியதால்தான் இந்தச் சட்டம் என்று மந்திரி கே. சி. ரெட்டி தெரிவித்தார். அப்படியானுல் சுப்ரீம் கோர்ட்டிற்கல்லவா அப்பீல் செய்திருக்க வேண்டும்? அவ்வாறு செய்யாது மசோதாக் கொண்டுவருவது சரியல்ல என்ருர். இந்தத் திருத்தத்தின்படி பார்த்தால் இந்தியா பூராவிலுமுள்ள மத்திய சர்க்கார் கட்டிடங்கள் இடங்கள் தவிர டில்லியிலுள்ள எல்லா இடங்களுக்கும் இச்சட்டம் பொருந்தும். இது ஆபத்தானது. மந்திரி குறிப்பிட்டபடி இங்கெல்லாம் தங்கி இருப்பவர்கள் கட்டிடத் தொழிலாளிகள். வேறு இடவசதி செய்து தராது அவர்களை வெளியேற்றக்கூடாது. மதுரையில் திடீர்நகர் என்ற ஒரு இடமுண்டு. அங்கு யாரையும் வெளியேற்றவில்லை. வெளியேற்றுவதும் சரியல்ல. எஸ்டேட் அதிகாரி என்ற ஒரு அதிகாரி நியமிக்கப்பட்டுள்ளார். அவருக்கு அதிக அதிகாரம் கொடுக்கப்பட்டுள்ளது. இவைகளை எல்லாம் பொறுக்குக் கமிட்டி பரிசீலனை செய்ய வேண்டும்" என்று பேசி முடித்தார்.

### ஓட்டல் தொழிலாளிக்கு ரூ. 600 நஷ்டஈடு

*திருச்சி, மார்ச். 18—*

உறையூர் ராமச்சந்திரன் விலாஸ் காபி கிளப்பில் என். செல்லப்பன் என்ற தொழிலாளி மாதம் 14 ரூபாய் சம்பளத்தில் 12 வருடகாலமாக வேலை பார்த்து வந்தார்.

ஆனுல், இவர் முன்கையெடுத்து, மற்றத் தொழிலாளிகளுக்கும் போனஸ் கிடைப்பதற்காகப் பாடுபட்டார் என்ற காரணத்திற்காக, மேற்படி ஓட்டல் முதலாளி இவரை வேலையை விட்டு டிஸ்மிஸ் செய்துவிட்டார்,

திருச்சி ஜில்லா ஓட்டல் லேபர் யூனியன் இதில் தலையிட்டு பஞ்சாயத்தார் முன்னிலையில் நியாயத்தை எடுத்துச்சொல்லி, வேலையிழந்த செல்லப்பனுக்கு முதலாளியிடம் ரூ. 600 நஷ்டஈடு வாங்கித்தந்தது.

### ஆங்கில மொழியில் தமிழ் இலக்கியங்கள்

*சென்னை, மார்ச் 18—*

தமிழ் இலக்கியங்களை உலகிலுள்ள இதர நாட்டு மக்கள் படித்தறிவதற்குத் துணை செய்யும் முறையில் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்க சென்னை சர்க்கார் ஏற்பாடு செய்து வருகிறது. இதற்கு பேராசிரியர்கள் கே. ஸ்வாமிநாதன், டி. பி. மீனுட்சிசுந்தரம், எம். ஆர். பெருமாள் முதலியார், பெரியசாமி தூரன் முதலியவர்களடங்கிய ஒரு ஆசிரியர் குழு நியமிக்கப்பட்டிருக்கிறது.

Printed & Published by S. Krishnaswamy at Janasakthi Press, Madras-1
Editor: P. JEEVANANDAM.